SRI N. R. THIAGARAJAN : செலவு செய்வதில், ஜில்லாக்களின் ஜனத்தொகை அடிப்படையில் செலவு செய்யப்படுகிறதா? அல்லது தேவைக்குத் தகுந்தபடி செலவு செய்யப்படுகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜனத்தொகை அடிப்படையில் செலவு செய்வது இல்லை. தேவைக்குத் தகுந்த அளவு செலவு செய்வதற்கு நம்மிடம் பணம் இல்லை. எந்த எந்த அளவுக்குத் திட்டங்களை எடுத்து நடத்துவதற்கு ஏற்பாடு செய்ய முடியுமோ, அந்த அளவுக்குத் திட்டங்களை எடுத்து நடத்த ஏற்பாடு செய்யப்படுகிறது.

*Sanitary Inspectors*

* 4 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is guarantee of employment to all the persons qualified as Sanitary Inspectors;

(*b*) the pay-scale of Sanitary Inspectors; and

(*c*) whether there is any proposal to increase their pay?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Rs. 60—3—90—EB—4—130 for ordinary grade and Rs. 140—5—190 for selection grade.

(*c*) No.

SRI K. RAMACHANDRAN : ஹெல்த் இன்ஸ்பெக்டர்களும் சானிடரி இன்ஸ்பெக்டர்களுடைய வேலையைத்தான் கவனிக்கிறார்கள். அப்படியிருக்க சம்பள விகிதத்தில் ஏற்றத் தாழ்வு இருக்கிறதா? ஏற்றத் தாழ்வு இருக்கிறதென்றால், இரண்டு சம்பள விகிதங்களையும் ஒன்றாக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது ஹெல்த் இன்ஸ்பெக்டர்களுக்கும் ஹெல்த் அஸிஸ்டெண்டுகளுக்கும் வித்தியாசம் இருக்கிறது. மற்றபடி வேறு ஏதாவது மாறுதல் செய்வதாக தற்போது உத்தேசம் இல்லை.

SRI A. A. RASHEED : Is there any proposal to appoint Sanitary Inspectors to Class I Panchayats also?

THE HON. SRI M. A. MANICKAVELU : I want notice, Sir.

SRI M. K. SOMASUNDARAM : பஞ்சாயத்து போர்டிலே வேலை பார்க்கும் சுகாதார இன்ஸ்பெக்டர்களுக்கும் முனிசிபாலிடியில் வேலை பார்க்கும் சுகாதார இன்ஸ்பெக்டர்களுக்கும் ஒரேவிதமான சம்பளம் கொடுக்க அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : பஞ்சாயத்துக்களை யெல்லாம் திருத்தியமைக்க ஒரு மசோதா வருகிறது. அதிலே இதுவும் கவனிக்கப்படும் என்று நினைக்கிறேன்.

*Cement factory*

*5 *Q.*— SRI M. S. SELVARAJAN: கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—திருச்செந்தூர் தாலுக்காவில் இருக்கும் சிமிண்டுக்கு லாயக்கான மூலப் பொருள்களை உபயோகப்படுத்திக் கொண்டு அப்பகுதியில் ஓர் சிமிண்ட் தொழிற்சாலை ஆரம்பிக்க உத்தேசமுண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : Cement industry has been left to the private sector for development. The Government have no proposals to start any cement factory in Tiruchendur taluk.

3rd September 1958]

**Sri M. S. SELVARAJAN** : சிமிண்ட் தொழிற்சாலை ஆரம்பிக்க தனிபட்ட முறையிலோ அல்லது கூட்டுறவு முறையிலோ முன்வந்தால், என்ன என்ன உதவிகள் அரசாங்கம் செய்யும் ? அங்கு இருக்கும் டெபாஸிட் எவ்வளவு காலத்திற்குத் தாக்குப் பிடிக்கும் ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : சமீபத்திலே ஜியலாஜிகல் ஸர்வே ஆப் இந்தியா சாத்தான்குளம் பகுதியிலே 90 லட்சம் டன் நல்ல சுண்ணும்புக் கற்கள் இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறுர்கள். அங்கு இன்னும் பெரிய தொழிற்சாலையை வைப்பதற்கு உபயோகமாக இருக்கும். 'என்ன என்ன உதவிகள் அரசாங்கம் செய்ய முடியும்' என்று கேட்பதற்குப் பதிலாக, தொழிற்சாலையொன்றை ஆரம்பிப்பதற்கு யாராவது முன்வந்து, இன்ன இன்ன உதவிகள் வேண்டுமென்று கேட்டால், சர்க்கார் உதவி செய்யத் தயாராக இருக்கும்.

**Sri S. LAZAR** : திருச்சி ஜில்லாவிலே இன்னொரு சிமிண்ட் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்கான மூலப் பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன என்பதனுல், அங்கே இன்னொரு தொழிற்சாலையை ஏற்படுத்த முடியும் என்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே குறிப்பிட்டிருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தனியார் துறையில் விடத்தான் சர்க்காருக்கு உத்தேசமா ? அல்லது, கூட்டுறவுத் துறையில் எடுக்க சர்க்காருக்கு உத்தேசம் இருக்கிறதா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : மூலக் கேள்வி திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள திருச்செந்தூர் தாலுகாவில் சிமிண்ட் தொழிற்சாலை ஏற்படுத்துவது பற்றியது.

**Sri A. VEDARATHNAM** : இந்த மாநிலத்தில் இப்பொழுது சிமிண்ட் பற்றுக்குறை இருக்கிறதா ? பற்றுக்குறை இல்லையானுல், உபரியாக பாக்டரி ஏற்படுத்துவதன் மூலமாக, அந்தத் தொழிலுக்கு ஹானி ஏற்படாதா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : சிமிண்ட் பற்றுக் குறையாக இருக்கிறதா இல்லையா என்பது சென்னை ராஜ்யத்தை மாத்திரம் வைத்துக் கொண்டு சொல்வது அல்ல. இந்த நாடு முழுவதையும் மொத்தமாக எடுத்துக் கொண்டுதான் சொல்ல முடியும். இந்த நாட்டுக்குத் தேவையான அளவு சிமிண்ட் இன்னும் உற்பத்தி செய்யப்படவில்லை. அதனுல், இன்னும் அதிகமான சிமண்ட் தொழிற்சாலைகளை ஏற்படுத்தவேண்டும் என்று சர்க்கார் திட்டம் வகுத்திருக்கிறுர்கள்.

**Sri A. A. RASHEED** : Has any private firm come forward to open a factory in Tiruchendur area ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : Not yet, Sir. I hope someone will come.

**Sri M. P, SUBRAMANIAM** : நாட்டில் தொழில்கள் ஆரம்பிப்பதில் சர்க்கார் துறை, தனியார் துறை என்ற விதி இருந்தாலும், நம்முடைய ராஜ்யத்தில் தொழில் ஆரம்பிக்கப்பட வேண்டியதன் அவசியத்தை முன்னிட்டு, சிமிண்ட் தொழிற்சாலை துவக்குவதை தனியார் துறைக்கே விடவேண்டும் என்பதை மாற்றி, அரசாங்கத் துறையிலே செய்வதற்கு அரசாங்கம் யோசிக்க வழிவகை இல்லையா ? இப்பொழுது இருக்கும் விதியை மாற்றியமைக்க முடியாதா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : தொழிற் கொள்கைத் தீர்மானம் (இண்டஸ்ட்ரியல் பாலிஸி ரிசல்யூஷன்) வகுக்கப்பட்டிருப்பது கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அதன்படி, சிமிண்ட் தொழிற்சாலை ஆரம்பிப்பது தனியார் துறைக்கு விடப்பட்டிருக்கிறது. தனியார் துறையில் நடத்துவதற்கு இப்பொழுது நல்ல எண்ணிக்கையில் நபர்கள் முன் வந்திருக்கிறுர்கள். அதனுல், இந்தப் பிரச்னை இப்பொழுது எழவில்லை.